வேண்டும். நியாயமான விலையில், விவசாயிகளுக்கும் உற்சாகம் குறைந்து விடாமல் இருக்கும்படியான stabilisation of prices) நிலையில் விலைகளை நிர்ணயிக்கவேண்டும் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். அந்த அடிப்படையில்தான் பிரைஸ் பாலிஸி திர்ணயிக்கப்படுகிறது.

*Kalingarayan channel*

* 477 *Q*.—SRI K. R. NALLASIVAM : } SRI N. K. PALANISAMI : } கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) கோவை ஜில்லா ஈரோடு தாலூகாவில் மேல் காலிங்கராயன் வாய்க்கால் வெட்டுவது எப்பொழுது ஆரம்பிக்கப்படும்?

(ஆ) இதன் மூலம் பயன் பெறக்கூடிய விஸ்தீரணம் எத்தனை ஏக்கர்?

(இ) இதில் முன்பே கீழ்பவானித் திட்டப் பகுதியில் சேர்ந்துள்ள நிலத்தின் விஸ்தீரணம் எவ்வளவு?

(ஈ) இதற்காகும் உத்தேச செலவு எவ்வளவு?

(உ) இவ்வாய்க்காலில் எத்தனை மாதங்கள் தண்ணீர் விடப்படும்?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The excavation of the Upper Kalingarayan Channel will be taken up after the scheme is sanctioned by Government. Plans and estimates for the scheme have been received by Government from the Chief Engineer (Irrigation) and the report of the Board of Revenue on the scheme is awaited.

(*b*) 16,000 acres of new area and 12,500 acres of existing ayacut under the Lower Bhavani Project.

(*c*) 12,500 acres.

(*d*) Rs. 262·00 lakhs.

(*e*) For 5½ months in a year, i.e., from the 15th August to the end of January.

SRI K. R. NALLASIVAM : இந்த மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திற்காக கொடுக்கப்பட்டிருக்கும் புத்தகத்தில் இது பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது . . .

'Drainage and seepage water entering the Bhavani river . . . என்று சொல்லப்பட்டிருக்கிறது . . .

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுவது ஒன்றும் இங்கு கேட்கவில்லை.

SRI K. R. NALLASIVAM : அதாவது இந்த வாய்க்காலுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் ஆதாரமானது கீழ் பவானியிலிருந்து ஏற்படும் நீர் கசிவுத் தண்ணீர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த நீர் கசிவு நிரந்தரமாக இருக்கும் என்று சர்க்கார் கருதுகிறதா?

**THE HON. SRI P. KAKKAN :** லோயர் பவானி அணை கட்டிய வட்டாரத்தில் தண்ணீர் கசிவு ஏற்பட்டு தண்ணீர் வீணாக போகிறது, அதிலும் குறிப்பாக கடைசியில் இருக்கும் விவசாயிகளுக்கு தண்ணீர் சரியாகப் போய் சேருவதில்லை என்று அரசாங்கத்தினிடம் முறையிட்டிருக்கிறார்கள். நாங்களும் வரி கொடுக்கிறோம், ஆனால் எங்களுக்கு மட்டும் ஒழுங்காக தண்ணீர் கிடைப்பதில்லை என்று அங்குள்ள மக்கள் என்னிடம் கனம் நிதி அமைச்சர் அவர்களிடமும் பல தடவை கூறியிருக்கிறார்கள். இதைப் பற்றி அதிகாரிகளிடம் பரிசீலனை செய்யச் சொன்னோம். அதன் பின்னால் தான் "அப்பர் காளிங்கராயன் வாய்க்கால்" என்ற ஒரு திட்டத்தை கொண்டு வந்திருக்கிறோம். இதன் மூலம் இப்போது இருந்து வரக்கூடிய தண்ணீர் கஷ்டம் ஓரளவு தீரும் என்று நினைக்கிறேன்.

**SRI N. K. PALANISAMI :** இந்தத் திட்டத்திற்காக 2 கோடி 62 லட்சம் ரூபாய் செலவு செய்யப்படும் என்றும், அதன்படி சுமார் 12 ஆயிரம் ஏக்கர்கள் பாசன வசதி பெறும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதன்படி பார்த்தால் ஏக்கர் ஒன்றுக்கு சுமார் 2,000 ரூபாய் செலவு செய்யப்படும் என்று தெரிகிறது. இதைவிட குறைந்த செலவில் ஏற்கனவே பல திட்டங்களை அவனாசி தாலுகா, கோயம்புத்தூர், ஈரோடு போன்ற இடங்களில் உள்ள மக்கள் கேட்டிருக்கிறார்களே, அவைகளுக்கு எல்லாம் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

**THE HON. SRI P. KAKKAN :** அரசாங்கம் ஒரு திட்டத்தை கொண்டு வரும்போது அந்தந்த இடங்களிலுள்ள தேவைகளைப் பார்த்து, அங்குள்ள மக்களின் கஷ்டங்களை எல்லாம் அறிந்து தான் முடிவு செய்கிறது. ரூபாய் அதிகமாக செலவாகும் என்பதைப்பற்றி கவலை படப்போவதில்லை. மக்களுடைய கஷ்டங்கள் நீங்க வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம். அந்த முறையில் தான் இந்தத் திட்டம் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

**SRI K. R. NALLASIVAM :** இவ்வருடம் கீழ் பவானியில் நீர் கசிவு நின்று விட்டது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? இல்லையென்றால் அதைப்பற்றி பரிசீலனை செய்ய அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

**THE HON. SRI P. KAKKAN :** சமீபத்தில் நான் அந்தப்பக்கம் சுற்றுப்பிரயாணம் செய்யவில்லை. ஆகவே இந்த விவரங்கள் எனக்கு தெரியாது.

**SRI G. G. GURUMURTHI :** இந்த மேல் காளிங்கராயன் வாய்க்கால் திட்டம் கொண்டு வருவதற்கு முன்பாகவே, இந்த நீர் கசிவை உபயோகித்துக்கொள்ள பல சிறு திட்டங்கள் சீப்-என்சினியரிடத்தில் இருந்ததே அவைகள் எல்லாம் என்னவாயிற்று ? அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : தண்ணீர் இல்லாமல் கஷ்டப் படும் இடங்களுக்கு ஒத்தாசை செய்யவேண்டும் என்ற நோக்கத் துடன்தான் இந்தத் திட்டத்தை எடுத்துக்கொண்டிருக்கிறோம். கனம் அங்கத்தினர்கள் குறிப்பிடுகிற திட்டங்களைப் பற்றியுள்ள விவரங்களை கொடுப்பதற்கு தனிக்கேள்வி வேண்டும்.

(ஸ்ரீ ஜி. ஜி. குருமூர்த்தி எழுந்தார்.)

MR. SPEAKER : மூலக் கேள்வி கேட்டிருப்பவருக்குத்தான் ஒன்றுக்குமேல் உபகேள்வி கேட்க சந்தர்ப்பம் கொடுக்கமுடியும். தங்களை எப்படி அடிக்கடி உபகேள்வி கேட்க அனுமதிக்க முடியும்? வேண்டுமென்றால் நீங்களும் அதைப்பற்றி ஒரு கேள்வி அனுப்புங்கள்.

SRI P. G. MANICKAM : முன்னால் சொன்ன நீர் கசிவை பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும் இதற்காக நான்கு திட்டங்கள் 1960-ல் அங்கிகரிக்கப்பட்டிருக்கிறது என்றும் முன்னால் தெரிவிக்கப்பட்டது, இப்போது கொண்டுவரப்பட்டிருக்கும் காளிங்கராயன் வாய்க்கால் திட்டம் இதற்கு தடையாய் இருப்ப தாக தெரிகிறது, ஆகவே இதை இன்னும் பரிசிலனை செய்து பார்த்து முன்னால் போட்ட திட்டங்களை நிறைவேற்றுவதற்கு சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் இதற்கு தனியாக கேள்வி போடலாம்.

*Lift Irrigation*

* 478 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any proposal to increase the number of Lift Irrigation Schemes; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Yes, Sir. A statement [a] showing the new scheme proposed, is placed on the table of the House.

SRI N. K. PALANISAMI : கன்யாகுமரி ஜில்லாவில் ஒரே ஒரு இடத்தில்தான் 'லிப்ட் இர்ரிகேஷன்' இருக்கிறது. தாழ்வான இடத்திலிருந்து தண்ணீரை உயர்வான இடத்திற்கு கொண்டு போகும் திட்டம் ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது. நூற்றுக் கணக்கான ஏக்கருக்குப் பாயக்கூடிய திட்டம் அது. நம் மாகா ணத்தில் அம்மாதிரி பல இடங்களில் திட்டம் கொண்டுவர முடியும். அம்மாதிரி திட்டங்களை எந்த எந்த இடத்தில் வைக்க முடியும் என்று பரிசீலனை சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முதலில் கேட்ட கேள்விக்கு விடை அளித்திருக்கிறேன். அதற்குமேல் விவரங்கள் என்னிடம் ஒன்றும் இல்லை.

a Printed as Appendix II on page 220 infra.